# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4 — விலை 1 அணா

மலர் 13] சென்னை 21-8-56 துன்முகி, ஆவணி 6—செவ்வாய் (வெளியூர் 22-8-56 ஆவணி 7—புதன்) [இதழ் 7


### 1 லட்சம் தொழிலாளர் ஸ்ட்ரைக்!

ஜகர்த்தா, ஆக. 17—

போனஸ் கொடுக்க தோட்ட முதலாளிகள் மறுத்ததை ஆட்சேபித்து இந்தோனேஷ்யாவிலுள்ள ஒரு லட்சம் ரப்பர் தோட்டத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்.

### சீனா செல்ல அனுமதி மறுப்பு!

வாஷிங்டன், ஆக. 16—

சீனாவுக்கு அழைக்கப்பட்டுள்ள அமெரிக்கப் பத்திரிகை நிருபர்களுக்கு அமெரிக்க சர்க்கார் பாஸ்போர்ட் தர மறுத்துவிட்டது. சீனாவில் அவர்களைப் பாதுகாப்பது யார்? என்ற கவலையே காரணமாம்!

# சூயஸ் கால்வாயை நிர்வகிக்க

## எகிப்திய ஸ்தாபனம்

### இந்தியப் பிரதிநிதியின் ஐந்து அம்ச சமரசத்திட்டம்

லண்டன், ஆக. 20—

சூயஸ் பிரச்னைக்குத் தீர்வுகாண இன்று லண்டன் மகாநாட்டில் இந்தியப் பிரதிநிதிகள் கோஷ்டித் தலைவர் வி. கே. கிருஷ்ண மேனன் 5 அம்சத் திட்டமொன்றை அதிகாரப்பூர்வமாக சமர்ப்பித்தார்.

**இந்தத் திட்டத்தின் சாரமாவது**

1. இன்றைய நிலைமைக்கேற்ப 1888-ம் வருட கான்ஸ்டாண்டிநோபிள் ஒப்பந்தத்தை மாற்றுவது. எவ்வித பாகுபாடுமின்றி சகல தேசங்களும் சூயஸ் கால்வாயைப் பயன்படுத்த அனுமதிப்பது.

2. இது சம்பந்தமாகக் கூடிப் பேசி முடிவுகாண 1888-ம் வருட உடன்படிக்கை நாடுகளையும், சூயஸ் கால்வாயை உபயோகப்படுத்தும் இதர தேசங்களையும் கொண்ட விரிந்த மகாநாடு ஒன்று நடத்துவது.

3. சூயஸ் கால்வாயை எகிப்திய கார்ப்பரேஷன் ஒன்றே நிர்வகிப்பது.

4. இந்தக் கார்ப்பரேஷனுக்கு அவ்வப்போது கால்வாயை கண்காணிப்பது சம்பந்தமாக ஆலோசனை கூற பிரதிநிதித்துவம் வாய்ந்த ஒரு ஆலோசனைக் குழுவை அமைப்பது.

5. சூயஸை நிர்வகிக்கும் எகிப்திய கார்ப்பரேஷன் ஆண்டுதோறும் தனது வருடாந்திர அறிக்கையை ஐ. நா. சபைக்கு சமர்ப்பிப்பது.

இந்த 5 அம்சத் திட்டத்தை மகாநாட்டின் முன் வைத்து கிருஷ்ணமேனன் சுமார் 1 மணி நேரம் பேசினார். அவரது பிரசங்கத்தில், சூயஸ் பிரச்னைக்கு ஒரு நியாயமான பரிகாரம் காணாவிடில், அதன் காரணமாக பயங்கர விளைவுகள் ஏற்படும் என்று எச்சரித்தார். இந்தத் திட்டம் இன்றி, வேறுவிதமாக சூயஸ் கால்வாயை சர்வதேசக் கட்டுப்பாட்டிற்கு உட்படுத்துவதென்பது, எகிப்தின் அரசுரிமையை மறுப்பதாகுமென்றார். ஆகவே, இந்தத் திட்ட அடிப்படையில், பிரச்னைக்கு ஒரு சமரசம் காணுமாறு மகாநாட்டுப் பிரதிநிதிகளைக் கேட்டுக் கொண்டார்.

### சோவியத் ஆதரவு

இந்தியத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்டதும் அதற்கு சோவியத்தின் ஆதரவு தெரிவிக்கப்பட்டது. அதோடு ரஷ்யா சமர்ப்பிப்பதாக இருந்த தனது நகல் திட்டத்தையும் இந்தியத் திட்டத்திற்கு ஆதரவாக வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டது.

### எகிப்துக்கு திருப்தி

இந்தியா சமர்ப்பித்துள்ள திட்டம் திருப்தி அளிப்பதாக எகிப்திய வட்டாரங்கள் தெரிவித்தன. சில சிறிய மாறுதல்களோடு இந்தத் திட்டத்தை நாஸர் ஏற்றுக் கொள்வார் என்ற அறிகுறிகள் இங்கு தென்படுகின்றன.

### டல்லஸ் திட்டம்

இந்தியத் திட்டத்திற்கு மாற்றாக அமெரிக்க வெளிநாட்டு மந்திரி டல்லஸ் மேலை நாடுகளின் திட்டத்தை இன்று சமர்ப்பித்தார். சூயஸ் கால்வாயை நிர்வகிக்க சர்வதேச போர்ட் ஒன்று அமைப்பதும், கால்வாய் வருமானத்தில் எகிப்துக்கு ஒரு குறிப்பிட்ட பங்கு கொடுப்பதும் அவரது திட்டம்.

### மேற்கு நாடுகளின் போக்கு

இந்தியத் திட்டத்திற்கு மேற்கு நாடுகளிடம் போதுமான ஆதரவு இருப்பதாகத் தெரியவில்லை. பிரிட்டிஷ் வெளிநாட்டு இலாகா அதிகாரி ஒருவர் இந்தியத் திட்டத்தைப் பற்றி விமர்சிக்கும்போது, பிரிட்டிஷ் சர்க்கார் டல்லஸ் திட்டத்துக்குத்தான் முழு ஆதரவு காட்டும் என்று தெரிவித்தார். அமெரிக்க ராஜதந்திர வட்டாரங்

(4-ம் பக்கம் பார்க்க)

## மொரார்ஜி உண்ணா விரதத்திற்கு

### ஆமதாபாத் அசையவில்லை

### மகா குஜராத் போராட்டம் நீடிக்கிறது

தன் பேச்சைக் கேட்கக் கூட்டத்திற்கு ஒரு ஆள் கூட வரவில்லையென்பதற்காக வெகுண்டு பம்பாய் பிரதமர் மொரார்ஜிதேசாய் 19ந்தேதி மாலையிலிருந்து உண்ணாவிரதம் ஆரம்பித்த போதிலும்கூட, ஆமதாபாத் மக்கள் அந்த உண்ணாவிரதத்தை மதிப்பதாக இல்லை. இரு மொழி ராஜ்ய அமைப்பு முடிவை சர்க்கார் கைவிடும் வரையிலும் தொடர்ந்து போராட்டம் நடத்துவதென்று உறுதி கொண்டுள்ளனர்.

ஆமதாபாத், ஆக. 20—

இன்றும் 13வதுநாளாக எல்லா மார்க்கெட்டுகளும், பெரும்பான்மையான சிறு கடைகளும் மூடப்பட்டே கிடந்தன. இரு மொழி ராஜ்ய அமைப்பை எதிர்த்து ஹர்த்தால் தொடர்ந்து நடைபெறுகிறது.

கல்வி நிலையங்கள் பூராவும் மூடப்பட்டிருந்தன. பள்ளிக்கூடங்களுக்கோ, கல்லூரிகளுக்கோ மாணவர்கள் செல்லவில்லை.

மகாகுஜராத் அடையும் வரை தொடர்ந்து போராடுவதென்று மகாகுஜராத் பரிஷத் நிர்வாகக் கமிட்டி முடிவு செய்துள்ளது. குஜராத், சௌராஷ்ட்ரா கட்ச் பிரதேசங்களின் முன்னணிப் பிரமுகர்கள் இதில் அங்கம் வகிக்கின்றனர்.

ஆகஸ்ட் 24-ந் தேதியன்று "மகாகுஜராத் தினம்" அனுஷ்டிக்கும்படி குஜராத் மக்களுக்கு இக்கமிட்டி ஓர் வேண்டுகோள் விடுத்துள்ளது.

குஜராத்திலிருந்து பம்பாய், சௌராஷ்ட்ரா சட்டசபைகளுக்கும், பார்லிமெண்டுக்கும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள சகல மெம்பர்களும், ஸ்தல ஸ்தாபனங்களின் மெம்பர்களும் ராஜினாமா செய்துவிட்டு, மகாகுஜராத் கோஷத்தின் அடிப்படையில் மறு தேர்தலுக்கு நிற்க வேண்டுமென்று ஒரு தீர்மானமும் நிறைவேற்றியுள்ளது.

ராஜ்யப் புனரமைப்பு மசோதாவுக்கு ஜனாதிபதி அங்கீகாரம் வழங்கக் கூடாதென்று கோரி பத்து லட்சம் கையெழுத்துகள் திரட்ட ஏற்கனவே சில ஸ்தாபனங்கள் கூட்டாகச் சேர்ந்து ஆரம்பித்திருக்கும் இயக்கத்தில் தாங்களும் சேர்ந்து கொள்வதாக மற்றொரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது.

### கல்லூரி மாணவர்கள் வேலை நிறுத்தம்

குஜராத்தில் ஆமதாபாத்திலும், இன்னும் பல்வேறு இடங்களிலும் நடைபெற்றுவரும் வேலைநிறுத்தம் செப்டம்பர் வரையிலும் தொடர்ந்து நடைபெறுமென்று மகாகுஜராத் வித்யார்த்தி சமிதி இன்று அறிவித்தது.

இந்த முடிவு அறிவிக்கப்பட்ட மாணவர் கூட்டத்திற்கு ஒரு லட்சம் பேருக்கு அதிகமானவர்கள் வந்திருந்தனர்.

### எஸ். கே. பட்டீல் ஓலம்

பம்பாய், ஆக. 19—

ஸ்ரீ மொரார்ஜி தேசாயின் உண்ணாவிரதம் பற்றி பம்பாய் பிரதேச காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ எஸ். கே. பட்டீல் விடுத்த ஒரு அறிக்கையில், காந்திஜி, சர்தார் படேல் ஆகியோரின் பிறப்பிடமான குஜராத் நாடு இந்த மகத்தான தலைவரின் (மொரார்ஜியின்) புத்திமதியை எப்படிப் புறக்கணிக்க முடியும் என்று அங்கலாய்த்துள்ளார்.

### ஏ. கே. ஜி. யின் உண்ணாவிரதம் நீடிக்கிறது

ஆமதாபாத், ஆக. 20—

ஆகஸ்ட் 17-ந் தேதியன்று இங்கு கைது செய்யப்பட்ட, பார்லிமெண்டில் எதிர்க்கட்சித் தலைவராகவுள்ள தோழர் ஏ. கே. கோபாலனின் உண்ணாவிரதம் தொடர்ந்து நடைபெறுகிறது. கடந்த 3 நாட்களில் அவருடைய எடை 2 பவுண்டு குறைந்துள்ளது.

### பார்லிமெண்டில் ஒத்திவைப்புப் பிரேரணை

புதுடில்லி, ஆக. 20—

குஜராத்திலுள்ள நிலைமைபற்றி விவாதிக்க வேண்டுமென்று இன்று பார்லிமெண்டில் கம்யூனிஸ்ட் அங்கத்தினர் தோழர் கே. கே. பாசு கொண்டுவந்த ஒத்திவைப்புப் பிரேரணைக்கு சபாநாயகர் அனுமதியளிக்க மறுத்து விட்டார்.

**ஏன் இந்தப் பாகுபாடு?**

இந்தப் பிரேரணையைக் கொண்டு வந்து பேசுகையில் தோழர் பாசு, ஆமதாபாத்தில் சர்க்கார் மெம்பர்களுக்கும் எதிர்க்கட்சி மெம்பர்களுக்குமிடையே பாரபட்சம் காட்டப்படுவதேன்? என்று கேட்டார். ஏ. கே. கோபாலனுக்கும், எச். வி. காமத்துக்கும் ஆமதாபாத்துக்குள் செல்ல அனுமதிச் சீட்டுகள் மறுக்கப்பட்ட அதேசமயத்தில், பம்பாய் பிரதமர் மொரார்ஜி தேசாயிக்குக் கூட்டம் போடுவதற்கு 144 தளர்த்தப்பட்டதேன்? அதுவும் சாகும்வரை உண்ணாவிரதம் என்ற "நேரடி நடவடிக்கை" ஆரம்பித்தவருக்கு அனுமதி கொடுத்ததேன்? என்று கேட்டார்.

## இந்தியா திபேத் எல்லை நிர்ணயம்

### நவ சீனாவின் யோசனையை பிரதமர் நேரு ஏற்றார்

புதுடில்லி, ஆக, 20—

இன்று லோக சபையில் பிரதமர் நேரு இந்திய திபேத் எல்லை நிர்ணயம் செய்வதுபற்றி குறிப்பிட்டதாவது:

"இந்திய சர்க்காரின் பிரதிநிதிகளும், சீன சர்க்காரின் பிரதிநிதிகளும் ஒன்றாகக் கூடி, பாரா ஹோட்டி சமவெளியானது இந்தியாவுக்குள் இருக்கிறதா அல்லது திபேத்துக்குள் இருக்கிறதா என்பதை தேசப் படங்களின் துணை கொண்டு தீர்மானிக்க வேண்டுமென்று சீன சர்க்கார் யோசனை கூறியிருக்கிறது. அதை இந்திய சர்க்காரும் ஒப்புக் கொண்டிருக்கிறது" என்றார் நேரு.

### பம்பாயிலிருந்து ஜனசக்திக்கு ரூ. 51

பம்பாய் இந்திய மாலுமிகள் ஹாஸ்டலிலிருந்து திரு. எம். ஏ. ஹமீது அவர்கள் தன் நண்பர்களிடம் வசூல் செய்து ரூ. 51-ஐ ஜனசக்தி தினசரி நிதிக்கு அனுப்பியுள்ளார்.

## நிலவுடமைக்கு வரம்பு 30 ஏகர் போதும்

### பெப்ஸு காங்கிரஸ் சட்டசபை முடிவு

பாட்டியாலா, ஆக. 19—

பெப்ஸு காங்கிரஸ் சட்டசபை கட்சியினர் ஆகஸ்ட் 21ந் தேதி கொண்டுவரப் போவதாக இருக்கும் விரிவான விவசாய சீர்திருத்த சாகுபடியாளர் திருத்தச் சட்ட மசோதா முதலியவற்றை மாற்றியுள்ளனர். எல்லாவிதமான நிலவுடமைக்கும் 30 ஏகர் என்ற வரம்பை நிர்ணயிக்க முடிவு செய்திருக்கிறார்கள். இதுபற்றிய சட்டம் அமுலுக்கு வந்த உடனேயே நிலவுடமைக்கு வரம்பு கட்டுவதை நிர்ப்பந்தமாக்க வேண்டும் என்று பெரும்பான்மையான உறுப்பினர்கள் முடிவு செய்திருக்கின்றனர்.

## வங்கப் படிப்பினையை சர்க்கார் மறந்ததேன்?

### கம்யூனிஸ்ட் மெம்பர் கேள்வி

புதுடில்லி, ஆக. 20—

இன்று டில்லி ராஜ்ய சபையில் ராஜ்யப் புனரமைப்பு மசோதா பற்றி தொடர்ந்து நடந்த விவாதத்தின்போது, கம்யூனிஸ்ட் அங்கத்தினர் தோழர் பி. நாராயணன் நாயர் பேசுகையில்: "வங்காளத்தில் தங்களுக்குக் கிடைத்த படிப்பினையை சர்க்கார் இதற்குள் மறந்துவிட்டது விநோதமாக இருக்கிறது. அங்கு மக்கள் வங்காள-பிஹார் இணைப்பை நிராகரித்தனர். தற்பொழுது சர்க்கார் குஜராத் மக்களை சோதனைக்குள்ளாக்குகின்றனர். அவர்களுக்குத் தக்க பதிலும் கிடைத்துவருகிறது.

ஸ்ரீ மொரார்ஜி தேசாயின் வாக்கு பல ஆண்டுகளாக வேதவாக்காயிருந்த குஜராத்தில் இன்று ஆமதாபாத் நகரத்தில் அவர் பேச்சைக் கேட்கக் கூட்டத்தில் ஒரு ஆள்கூடக் கிடைக்காத நிலைமை. இது மிகவும் ஆச்சரியமான விஷயமே. அது மட்டுமல்ல. மிகவும் முக்கியமான விஷயம். இதைப் பார்த்தாவது காங்கிரஸ் தலைவர்கள் பொறுமையுடன் உட்கார்ந்து நிலைமையைப் பரிசீலனை செய்வார்கள் என்று நம்புகிறேன்" என்றார்.

அவர் மேலும் பேசுகையில், "கூட்டத்திற்கு ஆள் வரவில்லையென்று ஸ்ரீ மொரார்ஜி உண்ணாவிரதம் ஆரம்பித்துள்ளார். ஆனால் பல்லாயிரக்கணக்கான மக்கள் திரண்டு தன் பேச்சைக் கேட்க வந்த கூட்டத்தில் பேசுவதற்கு அனுமதியளிக்க மறுத்ததற்காக ஸ்ரீ ஏ. கே. கோபாலன் உண்ணாவிரதமிருக்கிறார்" என்றார்.

### பாரதி நிலையக் கூட்டம்

தர்மபுரி, ஆக. 17—

பாரதி நூல் நிலைய நிர்வாகிகள் கூட்டம் தோழர் கந்தசாமி தலைமையில் இன்று பாரதி புரத்தில் நடைபெற்றபோது, ஜனசக்தி தினசரியானதை வரவேற்றும், சூயஸ் கால்வாய் தேச உடைமையாக்கப்பட்டதை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

# ஜனசக்தி

ஆசிரியர் குழு :
ப. ஜீவானந்தம் ஆசிரியர்,
எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராமமூர்த்தி, எஸ். ராமகிருஷ்ணன்,
கே. முத்தையா நிர்வாக ஆசிரியர்.

செவ்வாய் 21—8—56

## உரிமை மறுப்பு உண்ணாவிரதம்

**ப**ம்பாய் முதலமைச்சர் மொரார்ஜி தேசாயின் உண்ணாவிரதம் முந்தாநாள் பிற்பகலிலிருந்து நடந்துகொண்டிருக்கிறது.

இந்த "வேள்வி" சரி, தப்புக் கூறுவதற்கு அப்பாற்பட்ட "மிகப்பெரிய விஷயம்" என்கிறார் படீல். இந்த "மகா சோதனை"க்கு மொரார்ஜியை "உந்துவித்த பேருணர்ச்சியை"ப் போற்றுகிறார் முன்ஷி. காங்கிரஸ் தலைவர் தேபர் பக்கத்திலேயே இருக்கிறார். கந்துபாய் தேசாய், வாசவதா, நந்தா, ஷா ஆகிய அமைச்சர்களும் தொழிற்சங்கத் தலைவர்களும் அகமதாபாத்தில் இருந்து, மொரார்ஜியின் "அருந்தவ" வெற்றிக்குப் பெரும் பாடுபடுகிறார்கள். குஜராத் காங்கிரஸ் தலைவர்களும் முதலமைச்சர் "கொண்ட கொள்கையில்" வெற்றிபெற உயிரைவிடத் தயாராகிப் பணிவிடை புரிகிறார்கள். குஜராத்திக் காங்கிரஸ் தலைவர்களின் எதிரொலி இது.

பண்டித நேரு, 'போன்' தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறார். பாராளுமன்றப் பெருந்தலைகள் கவலைப்படுகிறார்கள். பாராளுமன்றக் கட்சி அங்கீகாரம் கொடுத்துவிட்டது. பம்பாயில் பலர் அனுதாப உண்ணாவிரதத்தில் இறங்கியிருக்கிறார்கள். பத்திரிகைகள் இந்தச் செய்திகளையே அமர்க்களப்படுத்திக் காட்டுகின்றன.

இவர்கள் எல்லோரும் மொரார்ஜியின் "புனிதப் போராட்டத்தை" நியாயப்படுத்துகிறார்கள்.

இத்தனை தடபுடல்பட்டு, நாட்டில் பரபரப்பைக் கிளறியிருக்கிற உண்ணாவிரதத்தின் குறிக்கோள் என்ன? அகமதாபாத்தில் மொரார்ஜி பேச்சை பொதுமக்கள் நிதானமாகக் கேட்பதற்கான சூழ்நிலையும் 'குஜராத் முழுவதிலும் இன்றுள்ள கொந்தளிப்பு அடங்கி, 'அமைதியான சூழ்நிலையும் மீளவேண்டும்' என்பதற்காகத்தான்.

அவருடைய உண்ணாவிரதத்தின் மறுபக்கம் என்ன? லோக் சபை நிறைவேற்றியுள்ள இருமொழி பம்பாய் ராஜ்யச் சட்டத்தை, குஜராத்தி மக்கள் எதிர்ப்பின்றி ஒப்புக்கொள்ள வேண்டுமென்பதுதான்.

குஜராத்தி மக்கள் 40 ஆண்டுகளாகக் காங்கிரஸ் பாரம்பரியம் கொண்ட மக்கள். காந்தியடிகளையும் வல்லபாய் படேலையும் பெற்றெடுத்த மாகாணம், குஜரத் மாகாணம். குஜராத்தி மக்களின் மகாகூர்ஜரப் போராட்டத்திற்கு தேசீய, ஜனநாயகப் போராட்டமும் காந்தியடிகளின் தலைமையும்தான் ஊற்றுக்கள். மொழிவழி ராஜ்ய எதிரிகளான நேருஜியும் மொரார்ஜியும் இந்த உண்மையை ஒப்ப மறுக்கிறார்கள்.

எனவே மகாகூர்ஜர அமைப்புக்காக, இருமொழி பம்பாய் ராஜ்யச் சட்டத்தை எதிர்த்து குஜராத்தின் சகல பகுதி மக்களும் ராஜ்யம் தழுவிய, உணர்ச்சிமிக்க பிரம்மாண்டமான கிளர்ச்சியில் அடலேறு என்னப் பாயவே, நேருஜி லோக சபைச் சட்டத்திற்குக் கீழ்ப்படியவேண்டியதே ஜனநாயகக் கடமை என்று உபதேசித்தார். பண்டித பந்த் மேற்படி சட்டத்தை "தேசீயத் தீர்மானம்" என்று லோக சபையில் வருணித்து பொம்மலாட்டம் காட்டினார்.

இந்தச் சட்டம், தேசீய-எதிர்ப்புதன்மை வாய்ந்த ஆத்திரமூட்டலே என்று முடிவு கட்டி, குஜராத்தி மக்கள் ஒரே மனிதன்போல் எதிர்ப்பெழுச்சியில் மேலும் முன்னேறினார்கள்

பஞ்சாப் படுகொலை நடத்திய டயரைக் காட்டிலும் ஈவிரக்கமற்ற இரத்த வெறியோடு, மொரார்ஜி அடக்குமுறைப் பேயை உசுப்பிவிட்டார். துப்பாக்கிப் பிரயோகத்தில் 2500 ரவுண்டுகளுக்குமேல் பாய்ச்சி பொதுமக்களைத் தெரு நாய்களைப்போல் சுட்டுக்கொன்றார். தடியடிப் பிரயோகத்தையும், கண்ணீர்ப்புகையையும் ஊரடங்கு சட்டத்தையும் இராணுவரோந்து சுற்றலையும் மனம் போன போக்கில் ஏவிவிட்டு, நாகரீக ஆட்சியைத் துரத்தியடித்து, இராணுவச் சட்ட ஆட்சிக்குப் பட்டங் கட்டினார்.

மகா கூர்ஜரப் போராட்டத்தின்முன் மொரார்ஜியின் பலாத்கார எதிர்ப்பு பலிக்கவில்லை. மக்களும்வளையவில்லை. கிளர்ச்சி-எழுச்சியும் குன்றவில்லை.

இரண்டு நாட்களுக்குமுன், டில்லியில் நேருஜி, "குஜராத்தில் நடைபெறும் துரதிருஷ்டமான" சம்பவங்களைத் தூண்டிவிடுகிறவர்கள் என்று 'குற்றஞ்சாட்டி', கம்யூனிஸ்டுகளையும் பி. சோஷலிஸ்டுகளையும் 'குற்றவாளிக் கூண்டில்' ஏற்றினார். முந்தாநாள் அகமதாபாத்தில் மொரார்ஜியும் உண்ணாவிரதத்தில் இறங்கினார். உண்ணாவிரதத்தில் நம்பிக்கையில்லாத மொரார்ஜி உண்ணாவிரதத்தில் இறங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.

"குஜராத்தின் கண்யமிக்க பரம்பரை அழிந்துபோவதைவிட நானே அழிந்துபோவது மேல். எனது சாவுகாரணமாக குஜரத் பாரதநாட்டுக்கு வலிமையூட்டும் பகுதியாகத் திகழட்டும்" என்று பறைசாற்றி "வேள்வி"யில் ஈடுபட்டுள்ளார் மொரார்ஜி.

மக்கள்பக்கமிருந்து நிகழ்ந்த சில "துரதிர்ஷ்ட சம்பவங்களை" நாம் கிஞ்சிற்றும் ஆதரிக்கவில்லை; எந்த ஜனநாயகவாதியும் ஆதரிக்கமாட்டான். குஜரத்தி மக்கள் இவற்றைத் தடுக்க ஒத்துழைப்பார்களென்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த "சம்பவங்களுக்கு" முக்யமான பெரும்பொறுப்பு மொரார்ஜி சர்க்காரின் படுமோசமான ஆத்திரமூட்டல் - அடக்குமுறை நடவடிக்கைகளே. அதை மறைக்க மாற்றுத் தந்திரம் உண்ணாவிரதம் என்றால், குஜரத் மக்கள் ஏமாறமாட்டார்கள்.

குஜராத் எழுச்சியின் ஆத்மா, மாற்றுக் கட்சிக்காரர்களின் தூண்டுதல் அல்ல; மொழிவழி ராஜ்யக் கோரிக்கையே என்பதை நேருஜி பார்க்க மறுக்கிறார். தேசம் பாராளுமன்ற வட்டாரத்திற்கு உட்பட்டதல்லவென்பதும், தங்கள் அடிப்படை உரிமைக்கு இடறுகட்டையாகுமானால், லோக சபையைக்கூட ஆக்கவோ அழிக்கவோ மக்களுக்கு உரிமையும் ஆற்றலும் உண்டு என்பதும் நமது பிரதமருக்குத் தெரியாததல்ல. மகா கூர்ஜர எழுச்சி, எல்லாக் கட்சிகளையும் சகல பகுதிகளையும் கொண்ட குஜராத்தி மக்களின் தேசீயக் கோரிக்கையை அடிப்படையாகக் கொண்டது என்பது மறைக்கமுடியாத உண்மை. சம்யுக்த மகாராஷ்டிர சமிதியும், நவம்பர் 1ம் தேதி, மகாராஷ்டிர முழுவதிலும் சத்யாக்கிரகம் தொடங்கப்போகிறது. எனவே, கட்சிப் பாகுபாடின்றி குஜராத்தி மக்களும் மகாராஷ்டிர மக்களும் விரும்பாத, எத்தனையோ உயிர்களைக் கொடுத்தும் எதிர்த்த, எதிர்க்கிற, இருமொழி பம்பாய் ராஜ்ய அமைப்பைத் திணிப்பது இந்திய ஜனநாயகத்திற்கும் ஒற்றுமைக்கும் பாதகமானது.

மகாகூர்ஜரத்திற்கும், பம்பாய் உள்ளிட்ட சம்யுக்த மகாராஷ்டிரத்திற்கும் போராடும் குஜராத்திய, மராட்டிய மக்களை ஆதரித்து நிற்கவேண்டியது இந்திய மக்களின் கடமை.

## இன்றைய குறிப்புகள்

### ஒற்றுமைப் பாதையில் பாங்கு சிப்பந்திகள்

அகில இந்திய ரீதியில் ஸ்தாபன அடிப்படையிலும் சரி, போராட்ட பாரம்பர்யத்திலும் சரி முன்னணியில் நிற்கும் நடுத்தர வர்க்க சிப்பந்திகளின் தொழிற்சங்கங்களில் அகில இந்திய பாங்கு சிப்பந்திகள் சம்மேளனம் ஒன்று. அதனுடன் இணைந்துள்ள சென்னைப் பிராந்திய பாங்கு சிப்பந்திகள் சம்மேளனத்தின் மூன்றாவது ஆண்டு விழா அண்மையில் வெற்றிகரமாக நடைபெற்றது.

இம் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் பல பொதுப் பிரச்னைகளையும், பாங்கு சிப்பந்திகள் கோரிக்கைகளையும் மக்கள் அரங்கத்தின் முன் கொண்டுவந்திருக்கின்றன. அவற்றை நாம் பூரணமாக ஆதரிக்கிறோம். சர்க்காரும் பாங்கு நிர்வாகங்களும் உடனடியாக இவற்றை அங்கிகரித்து ஆவன செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகிறோம்.

நாடு தழுவிய விதத்தில் ஒரு சம்பளக் கமிஷன் நியமிக்கப்பட்டு நியாயமான சம்பளம் நிர்ணயிக்கப்படவேண்டும். நாட்டிலே தொழிற்சங்க ஒற்றுமை வளர்ந்தோங்க வேண்டும். பாங்குகளை தேசியமாக்க வேண்டும் என்ற பொதுக் கோரிக்கைகள் முன் வைக்கப்பெற்றன.

பாங்கு சிப்பந்திகளைப் பொறுத்தவரை இன்று விஷம்போல் ஏறிவரும் விலைவாசி உயர்வை சமாளிக்க உடனடியாக 25 சதவிகித சம்பள உயர்வு, பஞ்சப்படியை இணைத்து அடிப்படைச் சம்பளம், தொழிற்சங்க அங்கிகாரம் முதலிய குறிப்பிட்ட கோரிக்கைகள் முன் வைக்கப்பட்டன. அதோடு பாங்கு முதலாளிகளின் கையாடல்கள், மோசடிகளை அம்பலப்படுத்தியுள்ள பாங்குத் தீர்ப்பின் இரண்டாவது பகுதியை வெளியிட வேண்டும் என்றும் கோரிக்கை வைக்கப்பட்டது.

இக்கோரிக்கைகளை நாம் மனப்பூர்வமாக ஆதரிக்கிறோம். சென்ற காலத்தில் பாங்கு சிப்பந்திகள் போராட்டத்தில் இறங்கியபொழுது இதரதொழிலாளர்கள் இணையற்ற ஆதரவு காட்டினர். கையாலும் கருத்தாலும் பாடுபடுவோர்களின் வயிரம்பாய்ந்த ஒற்றுமை அன்று மலர்ந்து செறிந்து வளர்ந்தது. அதைப் பேணிக் காக்கவும் அதன்மூலம் பலம் பொருந்திய தொழிற்சங்க ஐக்கியத்தைக் கட்டி வளர்க்கவும் தொழிலாளர்கள் இந்தக் காலகட்டத்தில் பெருமுயற்சி செய்தல் வேண்டும். தொழிலாளி வர்க்கத்தின் விடுதலையும் வெற்றிகளும் இதில்தான் அடங்கியுள்ளன என்று பாங்கு சிப்பந்திகள் மகாநாடு நிறைவேற்றியுள்ள தீர்மானத்தை மீண்டும் வலியுறுத்துகிறோம்.

●

### ஏன் இந்த அலட்சியம்?

ஒரு சிறிய தொழில் தகராறு சர்க்காரின் அசட்டையாலும் பாரபட்சப் போக்கினாலும் இன்று பெரிய பிரச்சினையாக வெடித்திருப்பதைக் கரூரில் காணலாம். இந்த நிலைக்கு சர்க்காரே பொறுப்பாளி. தொழில் கோர்ட் தீர்ப்புகளைத் துச்சமாக மதித்து நடக்கிறார் விஸ்வம் டெக்ஸ்டைல் முதலாளி. அவரைத் தட்டிக் கேட்கத் துப்பில்லை ஆனால் நியாயம் கோரி தொழிற்சாலை திறக்கப்பட்டு வேலை வேண்டும் என்று விழைந்து அமைதியாக சத்தியாக்கிரகம் செய்து வரும் தொழிலாளர் மீது அடக்குமுறைப் புலிப் பாய்ச்சல் நடத்துகிறது சர்க்கார்.

இது சம்பந்தமாக சட்டசபையில் எம். கலியாணசுந்தரம் எம். எல். ஏ. ஓர் ஒத்திவைப்புப் பிரேரணை கொண்டு வந்தார். இது சாதாரண சட்டம், அமைதிப் பிரச்சினை என்று தொழில் மந்திரியும் நிதி மந்திரியும் தள்ளிச் சாடினார்கள். 113 தொழிலாளிகள் அநாவசியமாகக் கைது செய்யப்பட்டு அன்னாகாரமின்றிக் காலை 8 மணி முதல் மாலை 5மணிவரை போலீஸ் ஸ்டேஷனில் அடைக்கப்பட்டிருந்தது நியாயமா? என்று கேள்வி எழுப்பப்பட்டபோது தனக்கு விவரம் கிடைக்கவில்லை என்று மந்திரி மழுப்பினார்.

இப்பொழுதோ 117 பேர்கள் கைது செய்யப்பட்டு விடுதலையாகியிருக்கிறார்கள். ஸ்தல ஆர். டி. ஓ. வினால் சமரசம் செய்யமுடியவில்லை. முதலாளி எந்த அதிகாரியின் சமரசத்தையும் ஏற்காமல் பிடிவாத கோபுரத்தில் ஏறி உட்கார்ந்திருக்கிறார். இப்போராட்டம் சமரசமின்றி நீடிப்பது சர்க்கார் தொழிற் கொள்கையின் வண்டவாளத்தையே அம்பலப்படுத்துகிறது. உற்பத்தியைப் பெருக்குங்கள், திட்ட வெற்றிக்கு உதவுங்கள் என்று ஊருக்கு உபதேசிக்கும் சர்க்கார் இம் மாதிரித் தகராறுகளை உடனடியாகத்தீர்க்க முயலாதது ஏன்? காலங் கடந்து விட்ட இந்த சந்தர்ப்பத்திலாவது போலீசை நம்பி வாளா இராமல் தலையிட்டுச் சமரசம் செய்ய வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறோம்.

## 'நாஸரின் நடவடிக்கை நமக்கு வழிகாட்டி'

### சூயஸ் கால்வாய் பிரச்சினைபற்றி தோழர் ஜீவானந்தம் பேச்சு

நாஸர் எடுத்து வரும் நடவடிக்கைகளை இந்திய மக்கள் வரவேற்றுப் பாராட்டுகிறார்கள் என்பதற்கு அறிகுறியாக சென்ற 19-ம் தேதி சென்னை சீனிவாச சாஸ்திரி ஹாலில் காமன்வெல்த்—எதிர்ப்பு சங்கத்தின் ஆதரவில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. திரு. எச். டி. ராஜா தலைமை வகித்தார்.

அவர் கூறியதாவது :

சூயஸ், அமெரிக்க அல்லது பிரிட்டிஸ் அல்லது பிரஞ்சு சொத்தல்ல. எகிப்தின் சொத்து. அந்த கால்வாய் வழியாக கப்பல்களை கொண்டு போக அன்னியர் கட்டணம் செலுத்தவேண்டும். கால்வாயை நிர்வகிப்போம் என்று பிரிட்டிஷ்—அமெரிக்கர் சொல்லுகின்றனர். சென்னையிலிருந்து திருவனந்தபுரத்திற்கு ரயிலில் டிக்கெட் வாங்கிச் செல்லும் ஐரோப்பியர்கள் இந்த ரயில்வேயை நாங்களே நிர்வகிப்போம் என்றால் எப்படி இருக்கும்? அதே ரீதியில்தான் இருக்கிறது லண்டன் மகாநாட்டில் மேல் நாட்டினர் கோரிக்கையும். பனாமா கால்வாயையும், ஜிப்ரால்டரையும் நிர்வகிக்க சர்வதேசக் குழுவை நிறுவவேண்டும் என்று பிரிட்டிஷார் கேட்கிறார்கள்? சூயஸுக்கு மட்டும் சர்வதேச குழு ஏன்?என்றார்.

#### ஜீவா பேச்சு

அடுத்த ஜீவா பேசுகையில், நாஸரின் போக்கு வீறுகொண்டு எழும் உலக சுதந்திர மக்களின் குரல், உறுதி என்பதை நாம் அறியவேண்டும். பாம்புகளுக்கு புற்றுகள் உண்டல்லவா? அதைப்போல இந்த வெள்ளைக்கார பாம்புகள் அரபு நாடுகளை தங்கள் புற்றுகளாக உபயோகித்துச் சுரண்டி வருகின்றன. எகிப்து மேல் கைவைத்தால் அரபு நாடுகளில் உள்ள எண்ணெய்க் குழாய்களையெல்லாம் தகர்த்து விடுவோம் என்று அரபு நாடுகள் இப்பொழுது முழக்கம் செய்கின்றன.

தக்க சமயத்திலேயே கால்வாய் கம்பெனியை நாஸர் தேசிய மயமாக்கினார். பூர்வாங்கமாக பிரிட்டிஷ் துருப்புக்களை வெளியேற்றினார். பிரிட்டிஷாருக்கு தாஸனாக இருந்த எகிப்திய மன்னனையும் வெளியேற்றினார். எதிர் நடவடிக்கையாக எகிப்திய பொருளாதாரத்தையும் தற்காப்பையும்குலைக்க வெள்ளையர் முயன்றனர். ஆயுதங்களை சப்ளை செய்யமுடியாது என்றனர். உடனே செக் தேசத்திலிருந்து ஆயுதங்களை எகிப்தியர் வாங்கினர். எகிப்திய பருத்தியை இனி வாங்கமாட்டோம் என்றனர் வெள்ளையர். உடனே சீனவிடம் தங்கள் பருத்தியை விற்றனர் எகிப்தியர். உலகில் இரு மார்க்கெட்டுகள் இருப்பதால் ஒரு மார்க்கெட் முறைத்ததும் இன்னொரு மார்க்கெட் கைகொடுக்க தயாராக உள்ளது. ஆகவே ஏகாதிபத்தியங்கள் திக்கு முக்காடுகின்றன.

எகிப்தில் நாஸர் மேற் கொண்டுள்ள நிலையை, இந்தியாவில் நேருவும் மேற் கொண்டால்?... ஒன்பது ஆண்டுகளுக்கு முன் தலைவர்கள் சாதிப்பதாய் சொன்னதை 9 ஆண்டுகளில் சாதித்தார்களா? பிரிட்டிஷார் இன்னும் நமது நாட்டில் பொருளாதாரத் துறையில் வலுவாக இருந்து சுரண்டி வருகின்றனர். பி. அண்டு ஸி. மில், பாரி அண்டு கோ முதலியவைகள் தேச உடமையாக்கப்பட வேண்டும்.

வெள்ளையனே வெளியேறு என்று நாம் சொன்னோமே, சொன்னபடி நடந்ததா? நாம் வெளியேற்றினோமா? நமக்கு ரட்சகராக இருக்கிறார் நேரு என்று வெள்ளைக்காரர்கள் மூலதனம் கொண்டு போடுகிறார்கள். இந்த நிலை மாற வேண்டும். நாஸரின் நடவடிக்கை நமக்கு வழிகாட்டியாக இருக்க வேண்டும்.

ஏகாதிபத்திய எதிர்ப்பு உணர்ச்சியை கூர் தீட்ட வேண்டும். ஏகாதிபத்ய பிடிப்பை ஒழிக்க நாம் எல்லா ஜனநாயக சக்திகளையும் கட்சிகளையும் ஒன்று திரட்ட வேண்டும்.

இந்தப் பணியை காமன்வெல்த் எதிர்ப்பு சங்கம் மேற் கொண்டிருப்பதை நான் வரவேற்கிறேன். நீதியின் பெயரால் நாம் பிரிட்டிஷ் உடமைகளை இங்கே கைப்பற்ற வேண்டும். பொருளாதார சுதந்திரப் போராட்டத்தை துவக்கியுள்ள திரு. ராஜாவை நான் பாராட்டுகிறேன், என்றார் திரு. ப. ஜீவானந்தம்.

வீரத்தில் சிறப்படைந்துள்ள தமிழ்நாடு நாஸருக்கு பக்கபலமாக குரலை எழுப்பவேண்டும் என்று திரு. ஜி. உமாபதி கூறினார்.

திரு. எஸ். ஏ. ரஹீம், இந்நாட்டு மக்கள் யாவரும் எகிப்துக்கு பக்கபலமாக இருக்கிறார்கள் என்றும், உலகின் பல பாகங்களில் உள்ள சுரண்டல் கொள்கை ஒழிக்கப்பட வேண்டும் என்றும் கூறினார். திரு. சக்திதாசன் சுப்ரமணியம் வந்தனோபசாரம் கூறினார்.

## அமெரிக்க விவசாயப் பண்டங்கள்

### இந்தியாவில் சந்தை தேட பேச்சு வார்த்தைகள்

வாஷிங்டன், ஆக. 18— உபரியாகக்கிடக்கும் அமெரிக்க விவசாயப் பண்டங்களை இந்தியாவுக்கு விற்பனை செய்வதற்கான பேச்சு வார்த்தைகளை இந்திய சர்க்காருடன் நடத்துவது குறித்து அமெரிக்க ராஜாங்க வட்டாரங்களிலிருந்து தெரியவருகிறது. 40 கோடி டாலர் மதிப்புள்ள இப்பண்டங்களுக்கு இந்தியாவில் சந்தை தேடுவதாகத் தெரிகிறது. இந்தியா இந்தியச் செலவாணியைக் கொடுத்தே உபரியாக உள்ள கோதுமை, பருத்தி, அரிசியை வாங்குமாம்.

உபரிப் பொருள்கள் கிடங்குகளில் ஊளுத்துப்போய் அமெரிக்க சர்க்காருக்குப் பெருநஷ்டம் ஏற்படுவதாக முன்கூக்குரலெழுப்பியதை ஒட்டியே இந்த முயற்சி நடக்கிறது.

# ராஜ்ய பீடி, சுருட்டு தொழிலாளர் பிரதிநிதிகள் மந்திரியிடம் மகஜர்

சென்னை, ஆக. 18—

தமிழ்நாட்டிலுள்ள பீடி, சுருட்டுத் தொழிலாளரின் 15 பிரதிநிதிகள் சென்னையில் கூடி விவாதித்து ஒரு மகஜர் தயாரித்தார்கள். அந்த மகஜரை எடுத்துக்கொண்டு சுமார் 500 பீடி, சுருட்டுத் தொழிலாளர்கள் வண்ணாரப்பேட்டையிலிருந்து சட்டசபைக் கட்டிடத்திற்கு ஊர்வலமாகத் தங்கள் கோரிக்கை கோஷங்களை முழங்கிக்கொண்டு வந்து சேர்ந்தார்கள்.

தூதுகோஷ்டியினர் தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் உபதலைவர் தோழர் பி. ராமமூர்த்தி, காரியதரிசி தோழர் கே. எம். சுந்தரம் தலைமையில் தொழில் மந்திரி திரு. பக்தவத்சலத்தை பேட்டி கண்டு மகஜர் சமர்ப்பித்தனர்.

### மகஜர்

அந்த யாதாஸ்தில் பாக்டரிகளை உடைத்து பல பிராஞ்சுகளாகவும், காண்ட்ராக்டாகவும், தனி நபர் மூலமும் வேலை வாங்குவதால் ட்ரேட் மார்க் முதலாளி தொழிற்சட்டங்களிலிருந்து தப்பித்துக் கொண்டு தொழிலாளிகளைக் கசக்கிப் பிழிந்து வருகிறார்கள். அதைத் தடுப்பதற்கு ஒரு ட்ரேட் மார்க் முதலாளிக்கு ஒரு புகையிலை லைசென்ஸ் (L 2 லைசென்ஸ்)சுக்கு மேல் கொடுக்கக் கூடாது. இப்பொழுதுள்ள பிராஞ்சு கிடங்குகளை யெல்லாம் பிராஞ்ச் பாக்டரிகளாக மாற்றி அவைகளுக்கு பாக்டரிச் சட்டம் தொழில் தகராறுச் சட்டம் ஆகியவைகளை அமுலாக்க வேண்டும். இது சம்பந்தமாக விரைவில் ஒரு சட்டம் கொண்டுவர வேண்டுமென்றும் மற்றும் பல கோரிக்கைகளும் அடங்கியிருந்தன.

தொழில் மந்திரி விரைவில் சட்டம் கொண்டுவருவதாக வாக்களித்தார்.

தூதுகோஷ்டியில் கலந்து கொண்ட சங்க பிரதிநிதிகள்: எஸ். டி. ராதா, ஏ. ராகவன் சென்னை.

வே. கண்ணன், ஆர். வீரப்பன், கே. சீனிவாசன், வேலூர். கே. கூடுமியான், சேலம். ஆர். பி. பழனிச்சாமி, பல்லடம். மைதீன் திருநெல்வேலி. செய்யது, வாணியம்பாடி. சி. நாராயணசாமி, திமிரி. ப. காசிநாதன், திருச்சி. கே. ஏழுமலை, காஞ்சீபுரம். வி. எம். துரைச்சாமி, வேலூர். எ. ரஷீத், குடியாத்தம்.

## நியாயவிலைக் கடை கோரி கைநெசவுத் தொழிலாளர் மகஜர்

குடியாத்தம் ஆக. 18—

நகரில் விலைவாசிகள் விஷம் போல ஏறி வருவதால் நெசவுத் தொழிலாளர்களும் இதர பொது மக்களும் பெரிதும் பாதிக்கப்படுவதால் உடனே நியாயவிலைக் கடைகள் திறக்க வேண்டும் என்று கோரி மகஜர் ஒன்றை உதவி தாசில்தாரிடம் சமர்ப்பித்தார்கள்.

## தமிழ்நாடு மருத்துவர் மகாநாடு ஒத்திவைப்பு

சென்னை. ஆக. 19—

அண்மையில் சென்னையில் நடைபெறுவதாக இருந்த தமிழ்நாடு மருத்துவர் மகாநாடு அக்டோபர் மாதத்திற்கு ஒத்திவைக்கப்பட்டுள்ளதாகவும், மகாநாடு சம்பந்தமாக 5–81, பிராட்வே என்ற முகவரிக்கு கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளும்படியும் பொதுச்செயலாளர் எம். ஏ. இராமகிருஷ்ணன் கேட்டுக்கொள்கிறார்.

## விசைத்தறி வினை வைத்துவிடும்
### செங்குந்தர் சங்கம் மந்திரிக்கு மகஜர்

சென்னை, ஆக. 19—

சர்க்காரின் புதிய ஜவுளிக் கொள்கை சம்பந்தமாக, இன்று செங்குந்த மகாஜன சங்கம் சென்னை அரசாங்கத்தின் தொழில் மந்திரியிடம் ஒரு மகஜர் சமர்ப்பித்தது.

விசைத்தறிகள் கைத்தறி நெசவாளர்களின் வாழ்வை சீர்குலைத்துவிடுமென்றும், கனுங்கோ கமிட்டி அறிக்கை இந்த உண்மையை ஒப்புக்கொண்டிருக்கிறதென்றும், ஒரு விசைத்தறி 20 கைத்தறிகளின் வேலையை செய்ய முடியுமாதலால் நாட்டில் கடுமையான வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படுமென்றும் மகஜரில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

## நியாயவிலைக் கடை கோரி சப் கலெக்டரிடம் மகஜர்

பழனி, ஆக. 18—

விலைவாசி உயர்வால் தொழிலாளர்களும் இதர பொதுமக்களும் கஷ்டப்படுவதால் உணவு நியாய விலைக் கடைகள் திறக்க வேண்டும் என்று கோரி பழனி தாலுகா கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தோழர் வி. ஏ. கருப்புசாமி திண்டுக்கல் சப் கலெக்டரிடம் மகஜர் கொடுத்தார்.

## 'சோஷலிஸ்ட்' பத்திரிகைக்கு மறுப்பு!

சத்திரப்பட்டி, ஆக. 19—

இவ்வூர் சூர்யபிரகாஷ் கைத்தறி நெசவாளர் உற்பத்தி, விற்பனை சொஸைட்டியின் டைரக்டர்கள் கூட்டம் இன்று நடைபெற்ற போது, 8–7–56-ம் தேதி 'சோஷலிஸ்ட்' வார இதழில் சொஸைட்டி சம்பந்தமாக வெளிவந்த செய்தி உண்மைக்கு மாறாகவும், பொய்யானத் தகவல்களைக் கொடுப்பதாகவும் இருக்கிறதென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்தத் தவறான தகவலை பத்திரிகைக்கு அனுப்பிவைத்ததாகக் கூறப்படும் கே. ஏ. நாராயணன் என்பவரை மகாசபை கூடி இறுதியாக முடிவு செய்யும்வரை 'சஸ்பெண்ட்' செய்வது தீர்மானிக்கப்பட்டது.

## கயிறு பின்னும் தொழிலாளர் வேலைநிறுத்தம் வெற்றி

ஆலப்புழை, ஆக. 18—

1500க்கு மேற்பட்ட கயிறு பின்னும் தொழிலாளர்கள் 1956ம் ஆண்டுக்குத் தங்கள் வருமானத்தில் 6 சதவிகிதம் போனஸ் கோரி இன்று தொழிற்சாலையில் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் செய்தனர்.

ஆயினும், தொழிலாளர், முதலாளிகள் பிரதிநிதிகளின் கூட்டத்தில் ஏற்பட்ட தற்காலிக முடிவின்படி வேலைநிறுத்தம் வாபஸ் பெறப்பட்டது. அதன்படி இறுதி ஒப்பந்தம் ஏற்படும்வரை தொழிலாளிகளுக்கு 4 சத விகித போனஸ் முன்பணமாகக் கிடைக்கும்.

தேசியத் தொழிற் சங்கமும் (ஐ.என்.டி.யு.சி.), செங்கொடித் தொழிற் சங்கமும் சேர்ந்து கூட்டு முறையில் இவ்வேலை நிறுத்தத்தை நடத்தியது.

## மதுரை மாவட்ட இன்ஷ்யூரன்ஸ் சிப்பந்திகள் கூட்டம்

மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் ஜில்லாக்களைச் சேர்ந்த இன்ஷ்யூரன்ஸ் சிப்பந்திகளின் கூட்டம் ஆகஸ்ட் 12ந் தேதி மதுரையில் நடைபெற்றது. வி. எஸ். ஸ்ரீனிவாசன் தலைமை வகித்தார். டி. ரங்காச்சாரி வரவேற்புரை நிகழ்த்தினார். தர்மராசு சந்தோஷம் எம். ஏ.பி.எல்; மகாநாட்டைத் தொடங்கி வைத்தார். திண்டுக்கல் பாலசுப்ரமணியம் பி.ஏ.பி.எல். இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் தேசியமாக்கப்பட்டதை வரவேற்றும், சிப்பந்திகள் நிலை அபிவிருத்தியடையும் என நம்புவதாகவும் கூறினார். முன்னாள் மதுரை நகர சேர்மன் திரு. சி.எஸ். மெய்யப்பன், மதுரை பாங்கு ஊழியர் சங்கத் தலைவர் டி. பி. முனிரத்னம் முதலியோர் பேசினார்கள். இந்தப் பிராந்தியத்திற்கு ஒரு சங்கம் அமைக்கப்பட்டுப் புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

# ஹோ அண்டு கோ பிரஸ் போனஸ் வெற்றி

சென்னை, ஆக. 20...

ஒப்பந்தப்படி போனஸ் கொடுக்க மறுத்தார் சென்னை ஹோ அண்டு கோ பிரஸ்முதலாளி 300 தொழிலாளர்கள் மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் காரியதரிசிகள் ஏ. கோவிந்தசாமி, எஸ். தினதயாளு ஆகியோர் தலைமையில் ஊர்வலமாகச் சென்று லேபர் கமிஷனரிடம் மகஜர் சமர்ப்பித்தனர். லேபர் கமிஷனர் தலையிட்டு, உடனே ஒரு மாத போனஸ் தருமாறு உத்தரவிட்டார். அதன்படி ஒரு மாத போனஸ் பெற்றனர். (ந.நி.)

## அச்சுத் தொழிலாளர் ஊர்வலம்

சென்னை, ஆக. 20—

சென்னை நகர தொழிற்சங்க கவுன்ஸில் வேண்டுகோள்படி, 200 அச்சுத் தொழிலாளர்கள் லோன்ஸ் குயரிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு, விலைவாசி உயர்வைத் தடுத்து நிறுத்து! விலைவாசிக்கேற்றபடி பஞ்சப்படியை உயர்த்து! அடிப்படைச் சம்பளத்துடன் பஞ்சப்படியைச் சேர்! இன்ஷுரன்ஸ் திட்டத்தை மாற்றியமை! 25 சதவிகித சம்பள உயர்வு உடனே வேண்டும் என்று கோஷித்துக்கொண்டு சட்டசபைக்குச் சென்று மந்திரி எம். பக்தவத்சலத்திடம் மகஜர் சமர்ப்பித்தனர்.

## குமாஸ்தாவுக்கு ரூ. 750 நஷ்ட ஈடு கிடைத்தது

சென்னை, ஆக. 20—

சென்னை மை மாக்சைன் பத்திரிகாலயத்தில் ஆள் குறைப்பு செய்யப்பட்டார் குமாஸ்தா சுப்ரமண்ய ஐயர். இவர் நீண்ட காலம் சர்வீஸ் செய்திருந்த போதிலும், நஷ்ட ஈடுகொடுக்க மறுத்தார் முதலாளி. மதராஸ் பிரஸ் லேபர் யூனியன் நடவடிக்கை எடுத்ததின் பேரில் அவருக்கு ரூ. 750 நஷ்ட ஈடு கிடைத்தது. ந. நி.

## அனுமதியின்றி லாட்டரி நடத்தக் கூடாது சர்க்கார் அறிவிப்பு

சென்னை, ஆக. 18—

அரசாங்கத்தின் முன் அனுமதியின்றி 'லாட்டரி' சீட்டுகள் நடத்துவதோ அல்லது அவை சம்பந்தமாக துண்டுப் பிரசுரங்கள் வெளியிடுவது, விளம்பரம் செய்வது போன்றவைகளோ இந்திய பீனல் கோட் 294-வது விதியின்படி தண்டனைக்குறியது என்று எச்சரித்து இன்று சென்னை சர்க்கார் ஒரு அறிக்கை விடுத்துள்ளனர்.

## விசைத்தறியைப் புகுத்த மாட்டோம்-ஆந்திர சர்க்கார் முடிவு?

கர்னூல், ஆக. 18—

கைத்தறி நெசவு துறையில் விசைத்தறிகளைப் புகுத்துவதில்லை என்று ஆந்திர சர்க்கார் முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

விசைத்தறிகளை எதிர்த்து தொடர்ந்து உறுதியாகப் போராடி வரும் ஆந்திர கைத்தறி நெசவாளர்களுக்கு இது ஒரு பெரிய வெற்றியாகும்.

இந்திய சர்க்காரின் புதிய ஜவுளிக் கொள்கையை ஆந்திராவைப் பொறுத்தவரையில் கைவிடும்படி சென்ற வெள்ளிக்கிழமை நெசவாளர்களின் தூதுகோஷ்டி ஒன்று ஆந்திர முதலமைச்சர் கோபால் ரெட்டியை சந்தித்து வற்புறுத்தியதாக கூறப்படுகிறது.

# மதுரை சரோஜா மில்லில் உள்ளிருப்பு ஸ்டிரைக்

மதுரை, ஆக. 17—

சரோஜா வீவிங் மில்லில் நேற்று மானேஜ் மெண்டாரின் தூண்டுதலால் அபுபக்கர் என்னும் தொழிலாளி அபாண்டமானக் குற்றச்சாட்டுகள் சாட்டப்பட்டு கருங்காலிகளால் தாக்கப்பட்டார். இதை எதிர்த்து மில்லிலுள்ள சகல தொழிலாளர்களும் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர். பின்னர் லேபர் ஆபீஸரின் தலையீட்டின் பேரில், இனி இவ்வித சம்பவங்கள் நடைபெறாதபடி பார்த்துக் கொள்வதாகவும், அபுபக்கரை மீண்டும் வேலைக்கு எடுத்துக்கொள்வதாகவும் மில் நிர்வாகம் உறுதிகூறிற்று. ஆனால் மறுநாள் இந்த வாக்குறுதி பிரகாரம் மில் நிர்வாகம் நடந்து கொள்ளவில்லை. எனவே இதை எதிர்த்து சரோஜாவில் தொழிலாளர்கள் தொடர்ந்து உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

## நாட்டு நலனுக்கு எல்லோரும் தியாகம் செய்ய வேண்டும்
### பி. ராமமூர்த்தி பேச்சு

குடியாத்தம், ஆக. 18—

தொழிலாளர் உற்பத்தியைப் பெருக்க உழைப்பதன் மூலம் சேவா உணர்ச்சியைக் காட்ட வேண்டும் என்று கோருகிற சர்க்கார், டாட்டா பிர்லா முதலிய முதலாளிகள் ஏன் லாபத்தில் தியாகம் செய்யக் கூடாது என்று குடியாத்தம் டெக்ஸ்டைல் லேபர் யூனியன் 14-வது ஆண்டு விழாப் பொதுக்கூட்டத்தில் பேசுகையில் தோழர் ராமமூர்த்தி கூறினார். கூட்டத்திற்கு முன்னால் பெரிய ஊர்வலம் நடைபெற்றது. தோழர் ஏ. எஸ். கே. அய்யங்கார் செங்கொடி ஏற்றுவித்தார்.

# "ஐ. என். டி. யு. சி. யில் சேர்! இல்லையேல் ஜாதி சங்கத்தில் சேர்"

விருதுநகர், ஆக. 19—

கோரிக்கைகளைக் கொடுக்காவிட்டால் 14 நாள் கழித்து, காலவரையறையின்றி ஒவ்வொருநாள் மத்தியானத்துக்கு மேல் வேலை நிறுத்தம் செய்வோம் என்று விருதுநகர் முனிசிபல் தொழிலாளர்கள் மகாசபை கூடி தீர்மானித்திருக்கிறார்கள்.

குருசாமி மகன் குருசாமி, முத்துவீரன் மகன் மாடசாமி, சுப்பன் மனைவி காளி, குமராண்டி மகன் மாரியப்பன் ஆகியோரை முன் அறிவிப்பு இல்லாமல் வேலையை விட்டு நீக்கியது அனியாயம். சட்ட விரோதம். இவர்களை உடனே வேலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும். தொழிலாளர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டும். முனிசிபல் சபையார், மேஸ்திரிகள் சங்கத்துக்கும், சேர்மன் அசோசியேஷனுக்கும் ரூ. 100 வீதம் கொடுக்கிறது. அதுபோல் முனிசிபல் தொழிலாளர் சங்கத்துக்கும் கொடுக்கவேண்டும். பி. டிவிஷன் இன்ஸ்பெக்டர் கணேசன் தன் வீட்டு வேலைகளுக்கு தொழிலாளர்களைப் பயன்படுத்துகிறார். மறுத்தால் அடிப்பேன் பிடிப்பேன் என்று மிரட்டுகிறார். அவரை வேறு ஊருக்கு மாற்ற வேண்டும்; மற்றும் பல கோரிக்கைகளும் வைத்திருக்கிறார்கள்.

ஐ. என். டி. யு. சி. சங்கத்தில் சேரவேண்டுமென்றும் இல்லாவிட்டால் ஜாதிச் சங்கங்களிலாவது சேரவேண்டுமென்றும் நிர்ப்பந்திக்கிறார்கள் காங்கிரஸ் முனிசிபல் அங்கத்தினர்கள்.

## விஜயகுமார் மில் ஸ்டோர் நிர்வாகிகள் தேர்தல்

பழனி, ஆக. 18—

பழனி கலயம்புத்தூர் விஜயகுமார் மில் தொழிலாளர் கோவாப்ரேடிவ் கூட்டுறவு ஸ்டோர் டைரக்டர் தேர்தலில் மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கினை, பழனி மில் தொழிலாளர் சங்கம் (எச். எம். எஸ்.) சங்கங்களைச் சேர்ந்த பி. எஸ். மணி, சுந்தரம், ஜி. ராமசாமி, மூவரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஐ. என். டி. யு. சியைச் சேர்ந்தவர்களைக் கொண்டுவர முதலாளிகள் புரிந்த முயற்சி முறியடிக்கப்பட்டது. (ந. நி.)

## நியாயவார மசோதாவை சட்டமாக்கு

திருச்சி, ஆக. 17—

நியாயவார மசோதாவை சென்னை சர்க்கார் உடனே சட்டமாக்க வேண்டுமென்று கோரி அன்னவாசல் விவசாயிகள் 200 பேர் கையெழுத்திட்ட மகஜர் ஒன்று தாசில்தாரிடம் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது. (ந.நி.)

## அரசியல் கைதிகளை விடுதலை செய்க!

சிங்கை, ஆக. 18—

அரசியல் கைதிகளை விடுதலை செய்யும்படி கோரி, இன்று விக்கிரமசிங்கபுரத்தில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெற்றது. ஊர்வலத்திற்கு பி. சொரணம், தளவாய், ஆர். வி. அனந்தகிருஷ்ணன் ஆகியோர் தலைமை தாங்கி சென்றனர். அரசியல் கைதிகளை விடுதலை செய்யுமாறு வற்புறுத்தும் மகஜரில் சிங்கையில் மட்டும் ஆயிரத்திற்கு அதிகமான கையொப்பங்கள் வாங்கப்பட்டுள்ளன. (ந. நி.)

## 8 விவசாயிகள் கைது

திருச்சி, ஆக. 17—

நச்சாந்துபட்டி விவசாய சங்கத் தலைவர் எஸ். ஏ. டி. சுந்தரம் உட்பட 8 பேர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். மிராசுதார்கள் பக்கத்தில் 6 பேரும் கைது செய்யப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

எப்போதும்போல் வழக்கமாக வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்கு விவசாயிகள் முயற்சிக்கையில் மிராசுதார்களின் ஆட்கள் தடை செய்து கலகம் செய்ததையொட்டியே போலீசார் இந் நடவடிக்கை எடுத்துள்ளதாகத் தெரிகிறது. (ந.நி.)

## லைசென்ஸ் முறை புகுத்தியதால் பீடித் தொழிலாளர்படும் தொல்லை

இராசிபுரம், ஆக. 19—

இராசிபுரம் நகரில் பீடி சுற்றும் வேலையில் ஈடுபட்டுள்ளவர்களுக்குத் தொழிற்சாலை லைசென்ஸ் வேண்டும் என்று முன் எடுத்த முடிவு தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. இப்போது வந்துள்ள கமிஷனர் இம்முறையை நிரந்தரப்படுத்துவதாகவும் இதனால் தொழிலாளர் பல தொல்லைகளுக்கு ஆளாவதாகவும் தெரிய வருகிறது. (ந நி.)

## சர்வ கட்சி சுதந்திர தினம்

கிழக்கரை, ஆக. 16—

கிழக்கரை காங்கிரஸ், கம்யூனிஸ்ட் கட்சிக் கமிட்டிகள், வாலிபர் தொழிற் சங்கங்கள் சார்பாக சுதந்திர தினம் கொண்டாடப்பட்டது. உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் வெங்கட சுப்பையா, கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி வேலுசாமி, காங்கிரஸ் நகர கமிட்டி உபதலைவர் வி. சண்முகம் முதலியோர் பேசினார்கள். திரு. கிருஸ் தலைமை வகித்தார்.

# முத்துச்சிப்பி, சங்குக் குளி

## தொழிலாளர் கோரிக்கை

### மந்திரிக்கு மகஜர்

சென்னை, ஆக. 21—
தூத்துக்குடி, ராமநாதபுரம் ஜில்லா சங்குகுளித் தொழிலாளர் சங்கங்களின் கோரிக்கைகளடங்கிய யாதாஸ்து ஒன்றை தமிழ்நாடு தொழிற் சங்க காங்கிரஸ் காரியதரிசி தோழர் கே. எம். சுந்தரமும், தூத்துக்குடி சங்குகுளித் தொழிலாளர் சங்க காரியதரிசி தோழர் ஞா. சுடலைமுத்துவும் நேற்று முதலமைச்சர் காமராஜரிடமும், தொழில் மந்திரி திரு. பக்தவத்சலத்திடமும் சமர்ப்பித்தார்கள்.

தூத்துக்குடி தொழிலாளருக்கு, அவர்கள் எடுத்து வரும் மொத்த முத்துச் சிப்பியில் சரிபாதி தரவேண்டும். சங்கு ஒன்றுக்கு விலை 12 அணா தரவேண்டும். 1950 முதல் 55 வரை 5 வருஷங்களுக்கு போனஸூம், சொத்தை சொள்ளை சங்குகளுக்கு ஒரு அணாவும், அத்யாவசிய காலத்தில் சேமிப்பு பணத்திலிருந்து அட்வான்ஸ் கொடுக்கப்படவேண்டுமென்றும் சர்க்காரிடம் கேட்டிருக்கிறார்கள்.

ராமநாதபுரம் ஜில்லா சங்குகுளி தொழிலாளர்கள், குத்தகை முறை ஒழித்துவிட்டு லைசென்ஸ் முறையைக்கொண்டு வரவேண்டுமென்றும், சொத்தை சங்குகளுக்கும் சுருக்கடி சங்குகளுக்கும் பாதி விலைவேண்டுமென்றும் நல்ல,சங்கு ஒன்றுக்கு 12 அணா வேண்டுமென்றும், மற்றும் பல கோரிக்கைகளும் மகஜரில் கண்டிருந்தன.

இரு மந்திரிகளும் விவாதித்த பிறகு, ஆவன செய்வதாக வாக்களித்தனர்.—ந. நி.

## பொதுத் தேர்தல்கள் 1957பிப். 1முதல்14வரை

### தேர்தல் கமிஷனர் அறிவிப்பு

சண்டிகார், ஆக. 18—
1957 பிப்ரவரி 1ந் தேதி முதல் 14ந் தேதிவரை, முடிந்த வரையில் ஒரே சமயத்தில் இந்தியா பூராவிலும் தேர்தல்கள் நடைபெறுமென்று, இந்தியாவின் பிரதம தேர்தல் கமிஷனர் ஸ்ரீ. சுகுமார் சென், நேற்று பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் இங்கு குறிப்பிட்டார்.

பிப்ரவரி முடிவுக்குள் தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டுவிடும் என்றும் அவர் தெரிவித்தார்.

ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில், ஓட்டுப் பெட்டிகள் திருட்டுத்தனமாக உடைக்கப்படுவதைத் தடுக்க, அவை உறுதியானவைகளாகச் செய்யும்படிஉத்திரவிடப்பட்டுள்ளது என்று கூறினார்.

கடந்த பொதுத் தேர்தல்களுக்குப் பிறகு, நாட்டில் ஓட்டர்களின் எண்ணிக்கை 5 சதவிகிதம் உயர்ந்துள்ளதென்றும் குறிப்பிட்டார்.

## காய்கறி வியாபாரிகள் சங்க ஆண்டு விழா

திருச்சி, ஆக. 17—
காந்தி மார்க்கெட் காய்கறி வியாபாரிகள் சங்கத்தின் இரண்டாவது ஆண்டு விழா நடைபெற்றது. புத்தாண்டு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். சர்க்காரின் விற்பனை வரிக் குழுவுக்கு சங்கத்தின் சார்பில் திரு. வி. ஆர். அருணாசலம் தேர்ந்தெடுக்கப்பட்டார். சங்க நிர்வாகிகளாக டி. ராஜகோபால் பிள்ளை தலைவர், வி. ஆர். அருணாசலம் பிள்ளை காரியதரிசி, டி. வி. சாமிநாத பிள்ளை பொருளாளர் தேர்ந்தெடுக்கப்பட்டரர்.

## மாஸ்கோவில் மன்னர்

மாஸ்கோ, ஆக. 17—
ஜெய்பூர் மகாராஜாவும், மகாராணியும் மாஸ்கோ க்ரெம்ளின் மாளிகைக்கு நேற்று விஜயம் செய்தனர். பிறகு சோவியத் பிரதமர் புல்கானினுடன் விருந்துண்டனர்.

## சுரண்டுவதில் கோவில்களும் ஜமீன்தார்களும் ஒன்றே

### வினோபாஜியின் குற்றச்சாட்டு.

சென்னை, ஆக. 21—
சேலம் ஜில்லா பாப்பாரப்பட்டி கிராமத்தில் சென்ற வாரம் ஒரு பிரார்த்தனைக் கூட்டத்தில் பூமிதான முனிவர் வினோபாஜி அவர்கள் பேசினார் :

"முன் காலத்தில் எல்லாம் நிலத்துக்கு பஞ்சம் கிடையாது. ஜனத்தொகை இன்றுபோல் அன்று அதிகம் இருக்கவில்லை. ஆகவே கோவில்களுக்கு நிலங்கள் கொடுத்திருந்தால் அக்காலத்துக்கு அது பொருத்தமாக இருந்திருக்கும். ஆனால் இன்றுள்ள கோவில்களோ ஒரு ஜமீன்தாரைப்போல நடக்கின்றன. தங்களது வருமானங்களைப் பெருக்கிக் கொள்ளுவதற்கு குடியானவர்களைச் சுரண்டுகின்றன. குடியான மக்களை கோவில்களே சுரண்டுவதால், அத்தகைய கோவில்களுக்கு நிலங்களைத் தானம் கொடுப்பது பாபமாகும். இதற்குப் பதிலாக, உழைப்பைக் கொடுங்கள் ; வேண்டாமென்று சொல்வில்லை. அல்லது கோவில்கள் உண்மையிலேயே நல்லது செய்துவருவதாக உங்களுக்குத் தெரிந்தால் தான்யம் கொடுங்கள் " என்றார் வினோபாஜி.

## 117 நெசவாளர் கைது

### கோர்ட் தீர்ப்பை அமுல் நடத்த மறுப்பு

கரூர், ஆக 17—
கரூர் விஸ்வம் கைத்தறி பாக்டரியில் கோர்ட்டு தீர்ப்பை அமுலாக்க, பழி வாங்கப்பட்ட நெசவுத் தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கெடுத்துக் கொள்ளக் கோரி மறியல் செய்கின்றனர்.

சுமார் 117 நெசவாளர்களை போலீஸார் கைது செய்தனர். செய்தி பரவி நகரிலுள்ள நெசவாளர்கள் ஊர்வலமாகச் சென்று ஆர். டி. ஓ வை தலையிடக் கோரினர்.

மறுநாள் கைது செய்யப்பட்ட தொழிலாளிகள் விடுதலை செய்யப்பட்டனர். சமரச முயற்சி பயனளிக்கவில்லை. பேச்சு வார்த்தை நடந்து வருகிறது.

கோர்ட்டு தீர்ப்பை அமுலாக்க மறுக்கும் முதலாளியினால் நெசவாளர்கள் கொதிப்படைந்துள்ளனர்.

## காங்கிரஸ்-கம்யூனிஸ்ட் கூட்டுமுறையில் சுதந்திர தினம்

நாங்குனேரி, ஆக. 16—
இங்கு கம்யூனிஸ்ட்-காங்கிரஸ் கட்சிகளின் சார்பில் கூட்டுமுறையில் சுதந்திரதினம் கொண்டாடப்பட்டது.

காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ வி.கிருஷ்ணய்யங்கார் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சிக் காரியதரிசி வ. சங்கரதாஸ் காந்தி, திருமதி விசாலாட்சி ஆகியோர் பேசினர். (ந, நி)

## விசைத்தறிக்கு கண்டனம்

சீராளா, ஆக. 20—
திரு. சோமப்பா அவர்கள் கைத்தறி போர்டு மெம்பர்களில் ஒருவர். ஆந்திர கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் உபதலைவர். நேற்று அவர் இங்கு பேசுகையில், "விசைத் தறியைப் புகுத்துவது கைத்தறி தொழிலில் க்ஷயரோகக் கிருமிகளைப் புகுத்துவது போலாகும். விசைத்தறியைப் புகுத்துவதால் குடிசைத் தொழிலுக்கு அபாயம் ஏற்படும். 500 விசைத் தறிகளை இயக்குவதற்கு 5 நெசவாளர்கள் போதும். இதனால் 10,000 நெசவாளர்களுக்கு வேலையில்லாமல் போய்விடும். இதை அனுமதிக்கவே கூடாது" என்றார்.

## கோரிக்கை கிடைக்கா விட்டால் நேரடி நடவடிக்கை

உடுமலை, ஆக. 18–
அடிப்படைக் கோரிக்கைகள் பற்றிய பேச்சுவார்த்தைகளில் தொழிலாளருக்கு நியாயம் கிடைக்கும் முறையில் சீக்கிரம் முடிவு தெரியவேண்டும். இல்லையேல் நேரடி நடடிக்கையில் இறங்குவோம் என்று உடுமலை மில் தொழிலாளர் சங்க ஜெனரல் பாடிக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. சங்கத் தலைவர் சாமு தலைமை வகித்தார். கோவை மில் தொழிலாளர் சங்க உபதலைவர் திரு. ஆறுமுக முதலியார் அவர்கள் சொற்பொழிவாற்றினார். கோவை ஜில்லா மி. தொ. சங்கத்துடன் இணைந்து கொள்ளுவதென்றும், பிரீமியர் மில்லில் புதிய மெஷின் கொண்டுவந்து அதிகப்படி வேலைவாங்குவதைக் கண்டித்தும் அரசியல் கைதிகள் விடுதலை, விலைவாசிக்கேற்ற பஞ்சப்படி ஆகிய தீர்மானங்களும் நிறைவேறின.

## முதல் திட்டத்தின் கீழ் உணவு உற்பத்தி

### 15 முதல் 17 சதவிகிதமே!

லக்ஷ்மணபுரி, ஆக. 20—
முதல் ஐந்தாண்டுத்திட்ட காலத்தில் நாட்டில் உணவு உற்பத்தி 15 முதல் 17 சதவிகிதமே அதிகரித்திருக்கிறது. வேறுசிலர் உரிமை பாராட்டுவதுபோல 32 சதவிகிதம் அதிகரிக்கவில்லை என்று அப்பட்டமான தனது கருத்தை எடுத்துக் கூறுவதாக முன்னாள் உணவு மந்திரி, இன்று உத்தர பிரதேச மாகாண கவர்னர் திரு. கே. எம். முன்ஷி கூறினார். விவசாயக் கல்விபற்றிய இந்தியக் கவுன்சிலின் இரண்டாவது வகுப்புத் துவக்கவிழாவில் பேசும் பொழுது மேற்கண்டவாறு கூறினார்.

## தற்கால வாசிகள் பற்றிப் புதிய சட்டம் அமுல்

### இலங்கை சர்க்கார் உத்தரவு

கொழும்பு, ஆக. 21—
1944 முதல் இலங்கையில் தொடர்ச்சியாக வாழ்ந்து வந்த பிரிட்டிஷ் பிரஜைகள் (பிரஜா உரிமைச் சட்டம் வருமுன் இருந்து வந்த இந்தியர் உட்பட) தற்கால வாசிகளாகக் கருதப்பட்டு அனுமதிச்சீட்டு வழங்கப்பட்டு வந்தார்கள். இந்த முறையை ரத்தாக்கி வரச விஸா அனுமதி அளிப்பதற்கான உத்தரவை இலங்கை சர்க்காரின் குடியேற்ற வெளியேற்ற இலாகா அமுலுக்குக்கொண்டு வந்திருக்கிறது. இச்சட்டப்படி விஸாக்கள் அதிகப்பட்சம் 5 வருடத்திற்கே அனுமதிக்கப்படும். கட்டணமும் வருடத்திற்கு இரண்டு ரூபாய் விகிதத்தில் வசூலிப்பர்.

## தீப்பெட்டித் தொழிலாளர் கோரிக்கை

குடியாத்தம், ஆக. 18—
தீப்பெட்டித் தொழிலாளர்களுக்கு மாகாண முழுவதும் குறைந்தபட்சக் கூலி நிர்ணயிக்கப்பட வேண்டும் என்று கோரும் தீர்மானம் குடியாத்தம் தீப்பெட்டித் தொழிலாளர் சங்க ஆண்டு விழாக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது. ஆண்டு விழாவுக்கு டாக்டர் கண்ணபிரான் தலைமை வகித்தார். புது வருட நிர்வாகிகளாக டாக்டர் கண்ணபிரான் தலைவர், ஏ. என். கிருஷ்ணசாமி காரியதரிசி முதலியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## சூயஸ் கால்வாயை ....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கள் இந்தியத் திட்டத்தைத் 'தெளிவற்ற திட்டம்' என்று வர்ணித்தார்கள்.

### நிர்ணயமற்ற நிலை

மகாநாட்டில் சமர்ப்பிக்கப் பட்டுள்ள இந்த இரண்டு திட்டங்களுக்குமிடையே உள்ள பரந்த இடைவெளி இணைக்கப்படுவதற்கான சந்தர்ப்பம் இருப்பதாக தற்போதைக்குத் தோன்றவில்லை. அடுத்த 24 மணி நேரத்தில் என்ன நேரும் என்பதை சொல்லுவதற்கு முடியாமல் இருக்கிறது.

### எகிப்துக்கு தெரிவிக்கப்படலாம்

இரண்டு திட்டங்களையுமே எகிப்துக்குத் தெரிவிப்பது என்ற முடிவுக்கு மகாநாடு வரக்கூடும் என்று இங்கு பொதுவாக நம்பப்படுகிறது.

### பிடிவாதம் தளர்கிறது

இந்தியத் திட்டத்திற்குப் பதிலாக டல்லஸ் திட்டத்திற்கு சம்மதம் தேடுவதிலேயே மேற்கு நாடுகள் பிடிவாதமாக இருக்கின்றன. ஆனால் இந்தியத் திட்டத்திற்கு சோவியத் ஆதரவு கிடைத்திருப்பதை ஒட்டி, மேலை நாடுகள் தங்களது போக்கைமாற்றிக்கொண்டு இந்தியத் திட்டத்தைக் கவனமாக பரிசீலிக்கலாம் என்று தெரிகிறது.

## அஸ்வான் அணைக்கட்டு வேலை சீக்கிரம் துவங்கும்

கெய்ரோ, ஆக. 20—
நைல் நதி நீரை பங்கிட்டுக் கொள்வது சம்பந்தமாக சூடானுடு நடத்திவரும் பேச்சுவார்த்தைகள் முடியும் தருவாயிலிருக்கிறது. இது குறித்து ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டதும், வெகு சீக்கிரமே அஸ்வான் அணைக்கட்டு வேலை துவங்கப்படும் என்று அணைக்கட்டு அதிகாரி சமீர் ஹெல்மி இன்று தெரிவித்தார்.

## சூயஸ் தினம்

### எகிப்துக்கு அ. இ. சமாதான கமிட்டி ஆதரவு

புதுடெல்லி ஆக. 12—
சூயஸ் கால்வாயை எகிப்து தேச உடமையாக்கியதை ஆதரித்தும், சமரசமான முடிவுகாண இந்தியப் பிரதிநிதி எடுத்துவரும் முயற்சிகளைப் பாராட்டியும் இன்று இங்கு அகில இந்திய சமாதானக் கமிட்டியின் சார்பாக நடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அகில இந்திய சமாதானக் கவுன்சில் உபதலைவர் பண்டிட் சுந்தர்லால் தலைமைதாங்கினார். கூட்டத்திற்கு எகிப்து, சிரியா, ஈராக், சௌதி அரேபியா ஸ்தானிகர்கள் வந்திருந்தனர்.

## நடக்க இருப்பவை

திருச்செங்கோடு மில் தொழிலாளர் சங்க சார்பில் பொதுக் கூட்டம்: தேதி 23-8-56 மாலை 6-30 பேச்சாளர் தோழர் கே. அனந்தநம்பியார் எம். பி., தலைவர் டி. எஸ். அர்த்தநாரி எம். எல். ஏ.

●

கம்யூனிஸ்ட் கட்சி நிதிக்காக நாடகங்கள் : மதுரை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சியின் நிதிக்காக, பொள்ளாச்சி செஞ்சுடர் கலா மன்றத்தின் சார்பில் ஒட்டன் சத்திரத்தில், 23-8-56-ல் "என்னையும் கம்யூனிஸ்டாக்கி விட்டீர்" களென்ற நாடகமும், 24-8-56-ந் தேதி "பெற்ற தானம்" என்ற நாடகமும் நடைபெறும். வி. மதனகோபால் எம். எல். ஏ. தலைமை தாங்குவார்.

●

### மகாநாடு ஒத்திவைப்பு

24-8-56-ந் தேதி நடைபெற விருந்த பெரியகுளம் தாலுகா விவசாயிகள் சங்க 2-வது மகாநாடு 7-9-56-ந் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது.

## தமிழக மெங்கும் சுதந்திர தினம்

### நெடுங்குளம்

நாங்குனேரி, ஆக. 17—
சுதந்திர தினத்தன்று நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் முற்போக்கு வாலிபர் சங்கத் தலைவர் ஜே. செல்லையா தலைமை வகித்தார். தோழர் ஆர். சுவாமிதாஸ், தியாகிகளுக்கு வணக்கம் தெரிவித்தும், சுதந்திரத்தைப் பலப்படுத்துவதின் அவசியம் பற்றியும், ஜனசக்தி தினசரியை வரவேற்றும் பேசினார்.

●

வள்ளியூர், ஆக. 17—
கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஆகஸ்ட் 15-ந் தேதியன்று காலை தேசியக் கொடியேற்றுவிக்கப்பட்டது. மாலையில் கம்யூனிஸ்ட் கட்சி வர்த்தக குமாஸ்தாக்கள் சங்கம் சார்பில் ஊர்வலமும், பொதுக் கூட்டமும் நடைபெற்றது. தோழர் எம். சொக்கலிங்கம் சுதந்திர தினம்பற்றிப் பேசினார். (ந.நி.)

●

திருப்பத்தூர், ஆக. 18—
ராமநாதபுரம் ஜில்லா-திருப்பத்தூரில் எல்லாக் கட்சிகளும் சேர்ந்து கூட்டாக சுதந்திர தினம் நடத்தலாம் என்று நகர கம்யூனிஸ்ட் கட்சி விடுத்த வேண்டுகோளை காங்கிரஸ் கமிட்டியினர் நிராகரித்து விட்டனர்.

மாலையில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் வ. தார்முகம்மது, வயி. வீரபத்திரன், கூத்தக்குடி சண் முகம் ஆகியோர் பேசினர். (ந.நி.)

### திருச்சி

திருச்சி, ஆக. 17—
திருச்சி ஜில்லா கலெக்டர் தேசியக் கொடியை, ஏற்றுவிக்க, செங்கொடிகளும் மூவர்ண தேசிய கொடிகளும் வளைவுகளும், பந்தல் தெருக்களை அலங்கரிக்க, மேடையின் வடபுறம் செங்கொடி பறக்க திருச்சி கட்டிடத் தொழிலாளர் சங்கம் சுதந்திர தினம் கொண்டாடியது.

ஜில்லா கலெக்டர் திரு. ஆர். எஸ். மலையப்பனும், திருச்சி கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தியும் பெற்ற சுதந்திரத்தைப் பேண வேண்டிய கடமைகளை எடுத்துக்காட்டினார்கள். (ந. நி.)

Regd. No.M. 5934 Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press, (Phone 2241) 32, Broadway, Madras-1. Editor : P. JEEVANANDAM
REGISTERED AS A NEWS PAPER IN CEYLON